MR. SPEAKER : The hon. Member is not sure about the number of years.

SRI K VINAYAKAM : Sir, it is $14\frac{1}{2}$ years. The result is, parents are tempted to get exemption from the authorities concerned. Therefore, will the Government issue instructions to the University of Madras to relax the age-limit in view of the high standard of knowledge that has been obtained by the rising generation when compared to the old generation to which most of us belong?

THE HON. SRI C. SUBRAMANIAM : The age-limit is fourteen years and six months as on the 15th of July of the year in which they seek admission to courses of study. But so far as the relaxation is concerned, to my knowledge, no relaxation has been granted so far by the University Authorities.

SRI A. GOVINDASAMY : இங்கே எஸ்.எஸ்.எல்.ஸி. பரீட்சை எழுதுகிற நேரத்தில் வயது குறைந்திருந்தாலும் எக்ஸம்ஷன் கொடுத்து அனுமதிக்கிறார்கள். பாஸ் செய்கிறவர்களுக்கு "**They are eligible for admission to University Course**" என்று சர்டிபிகேட் கொடுக்கிறார்கள். ஆனால் இவர்கள் காலேஜுக்குப் போகும்போது வயது தடை விதிக்கக் காரணம் என்ன ? இங்கேயும் இவர்களுக்கு எக்ஸம்ஷன் கொடுப்பார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : அங்கே பரீட்சையில் நல்ல மார்க் வாங்கியிருப்பதற்காக 'காலேஜில் சேர்ந்து படிக்கத் தகுதி உடையவர்கள்' என்று சர்டிபிகேட் கொடுக்கப்படுகிறது. இங்கே மார்க்குகளும் வாங்கியிருக்க வேண்டும், வயதும் அடைந்திருக்க வேண்டும். அப்போது தான் இங்கே ஒப்புக்கொள்வார்கள். ஆகவே இதற்கும் அதற்கும் முரண்பாடு கிடையாது.

*Salaries of doctors in rural dispensaries*

* 113 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government have received any proposal from the North Arcot District Board Advisory Committee for the increase in the salaries of doctors in rural dispensaries; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes. A proposal for the increase of subsidy paid to Rural Medical Practitioners was received.

(*b*) The proposal could not be sanctioned owing to the difficult financial position of the district board.

SRI A A. RASHEED : Sir, do the Government realise that it is impossible to get doctors below Rs. 100 per month?

THE HON. SRI M. A. MANICKAVELU : These are rural medical practitioners, and they are also allowed to do private practice.

9th September 1958]

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : இப்போது கிராமாந்திர டிஸ்பென்ஸரிகளுக்கு மருந்துகள் மிகக் குறைவாகக் கொடுக்கப்படுகின்றன. இனிமேல் கிராமாந்திர வைத்தியசாலைகளுக்கு மருந்துகளை அதிகமாகக் கொடுத்து, கிராம மக்களுக்கு போதிய வைத்திய வசதி செய்து கொடுக்க அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

MR. SPEAKER : மூலக் கேள்வி டாக்டர்களின் சம்பளத்தைப் பற்றியது. மருந்துகளைப் பற்றி நீங்கள் உப கேள்வி போட்டிருக்கிறீர்கள். இதற்கு கனம் அமைச்சர் எப்படி பதில் சொல்ல முடியும் ? கனம் அமைச்சர் பதில் சொல்வாரானால், எனக்கு ஆட்சேபணை இல்லை.

THE HON. SRI M. A. MANICKAVELU : மூலக் கேள்வி மருந்துகளைப்பற்றியது அல்ல.

SRI D. S. AUTHIMOOLAM : எல்லா ஜில்லாக்களிலுள்ள கிராமாந்திர ஆஸ்பத்திரிகளுக்கு அதிக ஸப்ஸிடி கொடுக்கப்பட வேண்டுமென்ற கோரிக்கை சென்ற பத்து வருஷ காலமாக இருந்து வருகிறது. அப்படியிருக்கும்போது, இந்த ஸப்ஸிடியை அதிகப்படுத்த வேண்டுமென்று சர்க்கார் தீவிரமாக எண்ணுகிறதா, இல்லையா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அவ்வாறு சர்க்கார் எண்ணுவதுமட்டும் போதாது, ஜில்லா போர்டுகளும் அவ்வாறு எண்ணினால்தான் அதிக ஸப்ஸிடி கொடுக்க முடியும்.

SRI P. S. CHINNADURAI : போதிய சம்பளம் கொடுக்கப்படாததால் கிராமங்களுக்குச் செல்வதற்கு டாக்டர்கள் முன் வராமல் இருக்கிறார்கள் என்பது தங்களுக்குத் தெரிந்திருந்தும், அரசாங்கத்தார் பணம் இல்லை என்ற காரணத்தைக் காட்டி அவர்களுடைய சம்பளத்தை அதிகரிக்கத் தயங்குவது, கிராம மக்களுக்கு நன்மை செய்வதாகுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கிராமாந்திர டாக்டர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளம் போதுமானது அல்ல என்பது இப்போதைய பிரச்னை. இந்தக் குறைவை நீக்குவதற்கு யோசனை செய்யப்பட்டு வருகிறது. ப்ரைமரி ஹெல்த் ஸெண்டர்களிலுள்ள டாக்டர்களுக்கு முன்பு 50 ரூபாய் "நான்-ப்ராக்டிஸ் அலவன்ஸ்" கொடுக்கப்பட்டு வந்தது. இப்போது அந்த அலவன்ஸை 100 ரூபாயாக உயர்த்தியிருக்கிறோம். பிரச்னையைத் தீர்ப்பதற்காக காரியங்களை இம்மாதிரி கொஞ்சம் கொஞ்சமாகச் செய்து வருகிறோம்.

SRIMATHI A. S. PONNAMMAL : கிராமங்களில் உள்ள ஆஸ்பத்திரிகளில் வேலைபார்க்கும் டாக்டர்கள் கிராம மக்களிடமிருந்து பணம் வாங்கிக் கொள்கிறார்கள் என்று புகார் செய்யப்படுகிறது. கிராம ஆஸ்பத்திரி டாக்டர் ஒருவர் அம்மாதிரி பணம் வாங்கியதாக என்னிடம் புகார் செய்யப்பட்டதன்பேரில் நான் அவரை அதுபற்றி விசாரித்ததற்கு, அவர் "நாங்கள் என்ன செய்வோம் ? எங்களுக்கு பிள்ளை குட்டிகள் அதிகமாக இருக்கின்றன. எங்களுக்கு இன்னும் கொஞ்சம் அதிகம் சம்பளம் கொடுக்கப்பட்டால், இம்மாதிரி மக்களிடமிருந்து பணம் வாங்கமாட்டோம்" என்று சொன்னார். எனவே, கிராமாந்திர டிஸ்பென்ஸரிகளிலுள்ள டாக்டர்களுக்கு இன்னும் 25 ரூபாயாவது அதிகமாகச் சம்பளம் கொடுக்கப்படுமானால், நான் அந்த டாக்டர்கள் சார்பில் அரசாங்கத்திற்கு நன்றி செலுத்துவேன் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

MR. SPEAKER : அப்படிக் கூறிப் பிரயோஜனம் இல்லை. "இது பற்றி அரசாங்கம் யோசிக்குமா ?" என்று கேள்வி போடுங்கள். (சிரிப்பு.)

*Salaries and Allowances*

* 114 Q.—SRI P. G. MANICKAM : கனம் ரெவினியூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கவர்ன்மெண்டு ஆஸ்பத்திரிகளிலே வேலை செய்யும் கடைநிலை ஊழியர்களான தோட்டிகளுக்கு (வார்டுகளைச் சுத்தம் செய்பவர்களுக்கு) எந்த அடிப்படையில் சம்பளம், அலவன்ஸ் கொடுக்கப்படுகின்றன ?